[26th March 1958

SRI S. LAZAR : We could not hear the Hon. Minister's reply exactly and that is why I put this question, Sir.

MR. SPEAKER : Will the Hon. Minister please repeat his answer?

THE HON. SRI V. RAMIAH : Sir, they wanted the number of Municipal towns where we have town-bus-service and I have said that we have in 21 towns.

SRI K. VINAYAKAM : Did any Municipal authority make representations to Government requesting them to accord permission to run their own bus service so as to augment their slender finances?

THE HON. SRI V. RAMIAH : We have received several requests. But I am not in a position to inform the House which Municipalities asked for such permission. A separate question may be put and I shall try to answer.

SRI K. PERIANAN : திருச்சிக்கும் சென்னைக்கும் மெயில் பஸ் விடுவதாக அமைச்சர் அவர்கள் கூறினார்கள் . . .

MR. SPEAKER : இப்பொழுது நாம் 412 வது கேள்வியில் இருக்கிறோம். Next Question, No. 413.

SRI N. K. PALANISAMI : Sir, this may be taken up tomorrow.

MR SPEAKER : The hon. Member has represented to me that the answer is too long and therefore it might be taken up tomorrow. Since tomorrow's programme is heavily packed, we will take this on the day after tomorrow.

### *Slums*

* 414 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether slum clearance will be taken up in Municipalities and Major Panchayats under the Scheme for slum clearance and town-planning during the Second Five-Year Plan period;

(*b*) the amount allotted for implementing the scheme during 1957–58; and

(*c*) whether the amount given by the Central Government is also included in this allotment?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Under the slum Clearance Scheme of the Government of India, no slum improvement works have so far been undertaken in Municipalities and Major Panchayats. A sum of Rs. 168 lakhs has been allocated to the Madras State for slum clearance schemes for the Second Five-Year Plan period. This includes a matching subsidy of Rs. 42 lakhs to be contributed by the State Government under the scheme. Owing to the limited allotment, it was decided to confine slum

26th March 1958]

improvement works under the Central schemes to Madras City only. Further, the Madras Slum Improvement (Acquisition of Land) Act applies to Madras City only. It is proposed to extend the Act to mufassal areas also.

The Municipalities and major Panchayats may also take up slum clearance work in their areas, and meet the expenditure from their funds. They may also apply to the State Government, wherever necessary, for sanction of assistance for the purpose.

(*b*) & (*c*) No amount has been allocated by the Central or the State Government for slum clearance in the Municipalities and Major Panchayats. The allocations for slum clearance schemes in the Madras City for 1957–58, is Rs. 20 lakhs—(Rs. 15 lakhs by the Central Government and Rs. 5 lakhs by the Madras Government).

**Sri P. G. MANICKAM**: சேரி ஒழிப்புத் திட்டத்தை நிறைவேற்ற சர்க்காரிலிருந்து உதவி வேண்டும் அல்லது கடன் வேண்டுமென்று எத்தனை முனிஸிபாலிட்டிகளும், மேஜர் பஞ்சாயத்துகளும் சர்க்காருக்கு விண்ணப்பித்தன ? அவர்களுக்கு உதவித் தொகை எவ்வளவு கொடுக்கப்பட்டன ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இது, ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களுக்கு போட வேண்டிய கேள்வி.

**Sri N. MARUDACHALAM**: சர்க்கார் கோவை முனிஸிபாலிட்டிக்கு சேரி ஒழிப்புத் திட்டத்தின் கீழ் 1955–56ம் வருஷத்தில் தொகை ஒதுக்கப்பட்டதாக தெரிவித்திருந்தும் மறுபடியும் அந்த சேரி ஒழிப்புத்திட்டத்தை கைவிட்டது அமைச்சருக்குத் தெரியுமா ? அதற்கு பொருள் கொடுக்காததற்குக் காரணமென்ன ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இக்கேள்வியை என் சக மந்திரியாகிய ஸ்தல ஸ்தாபன மந்திரியவர்களிடம் போட வேண்டும்.

**Sri A. GOVINDASAMY**: சேரி ஒழிப்புத்திட்டத்தில், சென்னையில் கையாளும் முறையை என் கிராமங்களில் கையாளவில்லை ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: நான் பதில் சொன்னேன், அவர்கள் கொடுத்திருக்கிற 168 லட்சம் ரூபாய் சென்னையில் இருக்கிற சேரிகளை ஒழிப்பதற்குக் கூட போதவில்லை. சேரி ஒழிப்புத் திட்டப்படி, லாண்ட் அக்விசிஷன் செய்யவேண்டுமென்றால் அது சென்னையில்தான், நகரில் தான் இருக்கிறது. கிராமப்பகுதிகளுக்கு விஸ்தரிக்கப்பட வில்லை. விஸ்தரிக்க வேண்டுமென்று நண்பர்கள் விவாதத்தின்போது சொல்லலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri P. G. MANICKAM**: சென்னை நகர சேரி ஒழிப்புத் திட்டத்தை மற்ற நகரங்களுக்கும் கொண்டு வருவதற்கான யோசனை சர்க்காருக்கு இருக்கிறதா ? அப்படியிருப்பின் எப்பொழுது அது அமுலுக்குக் கொண்டு வரப்படும்.

**The Hon. Sri R. VENKATARAMAN**: இதரப் பகுதியில் இருக்கிறவர்கள் சேரி ஒழிப்பு வேண்டுமென்று சொன்னால், அதற்காக சர்க்காரிடத்தில் நிதி ஒதுக்கவேண்டுமென்று அவர்கள் கேட்டுக் கொள்ளலாம் என்று முதலிலேயே சொன்னேன்.

**Sri K. VINAYAKAM**: Sir, arising out of the answer given by the Hon. Minister, are the Government aware of the fact that in the City of Madras, the Slum Acquisition Act provides that once a place is declared 'slum', twelve years' rent has got to be paid for

the slum which works out to more than the actual value of the land and therefore, will the Government think of the possibility of amending the Slum Acquisition Act which is highly defective?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the hon. Member is slightly incorrect. The compensation payable under the Madras Slum Improvement (Acquisition of Land) Act, is twelve times the annual net income on that particular property. So far as land is concerned, there is no difficulty, the twelve times annual rent could be given. But in respect of huts costing about Rs. 10 or Rs. 20 or even Rs. 100 or Rs. 200, the rent is as much as Rs. 5 per month and twelve times the annual rent is about 700 or 800 rupees. Therefore, there is some difficulty with regard to acquisition of the superstructure on lands and Government are considering this matter

SRI M. KALYANASUNDARAM : ஸார், இதர முனிஸிபல் நகரத்திலுள்ள சேரிகளை ஒழிப்பதற்காக மத்திய சர்க்காரிடமிருந்து எவ்வளவு தொகை வேண்டுமென்று இந்த சர்க்கார் கேட்டார்கள். அப்படி கேட்ட தொகையில் எவ்வளவு கொடுக்கப்பட்டது ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஸ்லம் இம்ப்ரூவ்மெண்டுக்கு மத்திய சர்க்காரிலிருந்து ஒதுக்கப்பட்ட தொகை 168 லட்சம். எவ்வளவு வேண்டுமென்று கேட்டார்கள் என்பதற்கு இப்போது என்னிடம் தகவல் இல்லை. மூன்று நான்கு வருடங்களுக்கு முன்பு கேட்டது. இதற்கு தனி கேள்வி போட்டால் அதைப் பார்த்து சொல்லுகிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : இந்த சேரி ஒழிப்புக்காக சர்க்கார் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டு வருகிறது என்பது உண்மை தான். ஆனால் புதிதாக வரும் சேரிகளை ஒழிப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவது ரொம்பவும் உண்மை. புதுச்சேரிகளை ஒழிக்கும் விஷயம் கஷ்டமாகத்தான் இருக்கிறது—நான் குறிப்பிடுவது புதுச்சேரி அல்ல—புதிய சேரிகளை குறிப்பிடுகிறேன். (சிரிப்பு.) புது சேரிகளை தடுக்கின்ற முயற்சிகளை எடுத்துக்கொள்ளும்போது பல கஷ்டங்கள் ஏற்படுகிறது. இதற்கு கனம் அங்கத்தினர்களை போன்றவர்கள் ஒத்துழைப்பு கொடுப்பார்கள் என்று நம்புகிறேன். இம்மாதிரி தடுக்க நடவடிக்கை எடுக்கும்போது அதை நிறுத்தி வைக்கவேண்டுமென்று கேட்காமல் இருந்தால் அதுவே அரசாங்கத்திற்கு ஒரு பெரிய சகாயமாக இருக்கும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், சென்னை போன்ற நகரங்களில் ஜனத்தொகை அதிகமாக இருப்பதால் சேரிகளை ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. அதே போன்று ஜனத்தொகை அதிகமாக இருக்கும் மற்ற நகரத்திலுள்ள சேரிகளையும் ஒழிப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ? எடுக்கும் என்றால் எப்போது ?

THE HON. SRI R. VENKATARAMAN : மற்ற நகரத்திலுள்ள சேரிகளை ஒழிப்பதற்கு இந்த தொகையிலிருந்தல்லாமல் வேறு தொகையிலிருந்தும் கேட்கலாம்.

SRI V. SUBBIAH : சேரி ஒழிக்கும் திட்டத்தை மதராஸிலிருந்து வெளியே பரப்புவதற்கு அங்கங்கே ஏற்பட்டிருக்கும் சமுதாய நல திட்டத்திலும், தேசிய விஸ்தரிப்புத் திட்டத்திலும் இதை சேர்க்க சர்க்கார் முன் வருவார்களா ?

26th March 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த பிரச்னையில் நகரங்களில் தான் முதலில் இந்த திட்டத்தை கொண்டு வரவேண்டுமென்று எண்ணி இதை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : தலைவர் அவர்களே, ஏற்கனவே நகரங்களில் சேரிகள் அதிகமாக இருப்பது தெரியும். ஆனால் மேலும் மில்கள் அதிகமாக ஆரம்பிக்கப்படும் இடங்களில் இந்த ஸ்லம் ஏரியாக்கள் அதிகமாக உண்டாகிறது. மதுரைப்பக்கத்தில் இம்மாதிரி மில்கள் ஆரம்பிக்கப்படும்பொழுது பக்கத்திலுள்ள பள்ளங்களில் குடிசைகளை கட்டிக்கொள்கிறார்கள். இதனால் அசுத்தம் ஏற்படுகிறது. ஆகவே மில்களுக்கு லைஸன்ஸ் கொடுக்கும்பொழுது அதே நேரத்தில், டௌன் பிளானிங் பிரகாரமோ அல்லது ஹௌஸிங் பிளானிங் பிரகாரமோ ஏதாவது ஒரு திட்டத்தையும் கொண்டு வருவதற்கு சர்க்கார் ஏதாவது முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாட்டில் பல இடங்களிலும் இன்னின்ன இடத்தில் இம்மாதிரிப்பட்ட வீடுகள் கட்டிக்கொள்ள வேண்டும் என்று டௌன் பிளானிங் ஸ்கீம் இருக்கிறது. அதையும் மீறி கட்டுகின்றவர்களை தடுப்பதற்காக குடிசையை பிரிப்பது போன்ற காரியங்களில் இறங்கும்போது பல கஷ்டங்களும் ஏற்படுகிறது. அதனால் தான் இந்த நெருக்கடி ஏற்படுகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : ஸர், சென்னையை தவிர்த்து இதர நகரங்களில் இந்த திட்டம் கொண்டு வரப்படுமா என்பதைப்பற்றி கேட்ட சமயத்தில் இதைப்பற்றி விவாதம் நடக்கும்போது பேசிக்கொள்ளலாம் என்று சொன்னார்கள். அப்படியானால் இதர நகரங்களில் இதை கொண்டு வருவதற்கு சர்க்காரிடத்தில் திட்டங்கள் ஒன்றுமில்லையா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நான் மீண்டும் அதைத்தான் சொல்லுகிறேன். இந்த மான்ய கோரிக்கை வரும்பொழுது அந்த மந்திரி இதற்கு பதில் அளிப்பார்.

SRI T. S. RAMASWAMY PILLAI : இந்த திட்டத்திற்காக மத்திய சர்க்கார் 168 லட்சம் ரூபாய் செலவிட போகிறதாக சொன்னார்கள். இந்த தொகை நமது ராஜ்யம் முழுவதிற்குமா அல்லது சென்னை நகரத்திற்கு மாத்திரமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னை நகரத்திற்கு மாத்திரம்தான்.

SRI T. S. RAMASWAMY PILLAI : As there is likely to be great delay in improving all the slums, will the Government come forward to give some immediate relief by way of providing public convenience and water facilities in all the slums?

THE HON. SRI R. VENKATARAMAN : That we considered; but it appears that it will be a perpetuation of the slums. It is better to clear them rather than to provide one or two amenities and make them worse.

*Highways.*

*415 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government have issued any order prohibiting the planting of posts or digging of holes in highways, roads and streets in municipal towns and Panchayat villages?